மலர் 15 இதழ் 3

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

Regd. M No. 7897

Phone No. 76190; 76199



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 11—9—74 புதன்

வெளியூர் 12—9—74 வியாழன்

புது காங்கிரசில் காமராஜர் சேருவாரா? இந்திரா பதில்

3-ம் பக்கம்

## பாண்டிச்சேரி தேர்தல்: புது காங்கிரஸ் தீவிரம்

# அ. தி. மு. க. வுடன் தேர்தல் கூட்டு

## பழைய காங்கிரசுடன் கூட்டு இல்லை என அறிவிப்பு

பாண்டிச்சேரி, செப். 11— பாண்டிச்சேரி சட்டசபைக்கு நடக்க இருக்கும் தேர்தலில் புது காங்கிரஸ் கட்சி பழைய காங்கிரசுடன் கூட்டு சேராது என்றும், அ. தி. மு. க.வுடன் கூட்டணி சேரும் என்றும் தெரிகிறது.

இத் தேர்தலில் புது காங்கிரஸ் கட்சி அ. தி. மு. க. வுடன்தான் கூட்டணி சேர வேண்டும் என்று கட்சி மேலிடத்துக்கு பாண்டிச்சேரி புது காங்கிரஸ் செயலாளர் பி. சண்முகம் சிபாரிசு செய்துள்ளதாகக் கூறப்படுகிறது.

மாநில புது காங்கிரஸ் செயலாளர் சண்முகம் சமீபத்தில் டெல்லி சென்று பிரதமர் இந்திராவை சந்தித்து பாண்டிச்சேரி தேர்தல் பற்றி விவாதித்துள்ளார்.

டெல்லி சென்று திரும்பிய பி. சண்முகம் நிருபர்களிடம் கூறுகையில் பாண்டிச்சேரியில் பழைய காங்கிரஸ் கட்சிக்கு செலவாக்கு இல்லை என்பது கடந்த தேர்தல் மூலம் தெள்ளத் தெளிவாகிவிட்டது. வருகிற தேர்தலில் அக் கட்சியுடன் எங்கள் கட்சி தேர்தல் உறவோ அல்லது தொகுதி உடன்பாடோ செய்துகொள்ளாது" என்று கூறினார்.

### மாநகராட்சி ஊழல் எதிரொலி

## அ. தி. மு. க. கவுன்சிலர் வெங்கட் உட்பட மேலும் 11 பேர் சரண்

சென்னை, செப். 11— மாநகராட்சி சம்பளப் பட்டியல் மோசடி சம்பந்தமாக அ. தி. மு. க. கவுன்சிலர் ஒருவர் உட்பட மேலும் 11 பேர் இன்று கோர்ட்டில் சரண் அடைந்தனர்.

கைதான கவுன்சிலர் பெயர் கே. வெங்கட் 81-வது வட்டத்தில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்.

இவர் முதலில் பழைய காங்கிரசிலும் பிறகு இந்திரா காங்கிரசிலும் இருந்தவர். இப்போது அ. தி. மு. க.வில் இருந்து வருகிறார்.

ஏற்கனவே நேற்று 8 முன்னாள் கவுன்சிலர்கள் கோர்ட்டில் சரணடைந்து ஜாமீனில் விடுதலையாகியுள்ளனர்.

(செய்தி 3-ம் பக்கம் வெளியாகியுள்ளது)

இன்று சரணடைந்தவர்களில் மற்ற 10 பேர்களில் ஒருவர் ஆடிட்டர். ஒருவர் மாநகராட்சி குமாஸ்தா. மற்ற 8 பேரும் ஷராப்களாக பணிபுரிகின்றனர்.

இன்று சரணடைந்தவர்களின் பெயர்களாவன:—

1. கே. வெங்கட் (அ. தி. மு. க. கவுன்சிலர்)
2. வரதராஜன் (ஆடிட்டர்)
3. விஜயராகவன் (கிளார்க்)
4. ராதாகிருஷ்ணன்
5. பெருமாள்
6. மாணிக்கம்
7. ஜானகிராமன்
8. நந்தன்
9. அனுகிரக நாராயணமூர்த்தி
10. சுகானந்தமூர்த்தி
11. பாலகிருஷ்ணன்.

இவர்கள் அனைவரும் ஷராப்களாகப் பணிபுரிகின்றனர்.

இன்று பகல் 12-30மணிக்கு தலைமை செஷன்ஸ் நீதிபதி சிதம்பரம் முன்னிலையில் இவர்கள் சரணடைந்தனர்.

தங்களைப் போலீசார் தேடிவருவதாக அறிந்ததால் சரணடைவதாக இவர்கள் கோர்ட்டில் கூறினர்.

தங்களை ஜாமீனில் விடுதலை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டதன் பேரில் தலா ரூ. 2 ஆயிரம் சொந்த ஜாமீன் பேரிலும் அதே தொகைக்கு இரு நபர் ஜாமீன் பேரிலும் விடுதலை செய்ய நீதிபதி உத்தரவிட்டார்.

## கேரளாவில் மதுவிலக்கு வராது

திருனந்தபுரம், செப். 11— கேரளாவில் மீண்டும் மதுவிலக்கை அமுல்படுத்தும் நோக்கம் கேரள அரசுக்கு இல்லை என்று கேரள ரெவினியூமந்திரிபேபிஜான்கூறினார்

கள்ளச்சாராயம் காய்ச்சப்படுவதை அரசினால் நிறம்பட தடுக்க முடியும் என்ற நிலை இல்லாதவரையில் மீண்டும் மதுவிலக்கைக்கொண்டு வருவது விவேகமல்ல என்றார் அவர்.



சென்னை, செப். 11—அமரகவி பாரதியாரின் நினைவு நாளை முன்னிட்டு இன்று காலை, பாரதி இளைஞர் சங்கத்தின் சார்பில் கடற்கரையிலுள்ள பாரதியார் சிலைக்கு மாலை அணிவிக்கப்பட்டது.

சங்கத் தலைவர் கே. ராமமூர்த்தி, நடிகர் எஸ். வி. சகஸ்ரநாமம், பொள்ளாச்சி நா. மகாலிங்கம், ஆகியோர் மாலை அணிவித்தனர்.

இந்நிகழ்ச்சியில் மேலவை துணைத் தலைவர் ம. பொ. சி. யும் கலந்துகொண்டார்.

பாரதி பாடல்கள் பாடப்பட்டன.

## ஈரான் மன்னர் இந்தியா வருகிறார்

புதுடெல்லி செப். 11— ஈரான் மன்னர் ஷா அடுத்த மாதம் 2-ந் தேதி இந்தியா வருகிறார்.

டெல்லியில் அவர் பிரதமர் இந்திரா காந்தியுடன் பொருளாதார, அரசியல் விஷயங்கள் பற்றி முக்கிய பேச்சு வார்த்தைகளை நடத்துவார்.

அணுசக்தியை சமாதான காரியங்களுக்குப் பயன்படுத்துவதில் ஒத்துழைப்பு சம்பந்தமான ஏற்பாட்டை ஈரான் மன்னர் தனது பேச்சுவார்த்தைகளின்போது இறுதியாக்குவார் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இந்த ஏற்பாட்டின்படி ஈரானில் இந்திய அணுசக்தி விஞ்ஞானிகளின் உதவியுடன் கூட்டாக அணுசக்தி மின்சார நிலையம் ஒன்று அமைக்கப்படும்.

பிரதமர் இந்திரா காந்தி 4 மாதங்களுக்கு முன்னர் ஈரான் நாட்டுக்கு விஜயம் செய்து ஈரான் மன்னருடன் முக்கிய பேச்சுக்களை நடத்தியது நினைவிருக்கலாம்.

## எம். ஜி. ஆரை எதிர்த்து போராட்டம்: சிவாஜி ரசிகர் மன்றம் அறிவிப்பு

சென்னை, செப். 11—எம். ஜி. ஆரை எதிர்த்து போராட்டம் நடத்தப்படும் என்று சிவாஜி ரசிகர் மன்றம் அறிவித்திருக்கிறது.

காமராஜரைப் பற்றிப் பேச எம். ஜி. ஆருக்கு என்ன யோக்கியதை இருக்கிறது என்று கேட்டு, தனது போக்கை எம். ஜி. ஆர். உடனடியாக மாற்றிக்கொள்ள வேண்டும் என்றும் கடுமையாக எச்சரிக்கை கொடுக்கப்பட்டுள்ளது.

இதுகுறித்து சென்னை மாவட்ட சிவாஜி கணேசன் ரசிகர் மன்றச் செயலாளர்கள் எம். எழில்மணி, சைதை கோபாலகிருஷ்ணன் ஆகியோர் ஒரு அறிக்கை வெளியிட்டுள்ளார்.

காமராஜரைப் பற்றியும் சிவாஜியைப் பற்றியும் கீழ்த்தரமாக எம். ஜி. ஆர். பேசியிருப்பது தங்களை வேதனையடையச் செய்திருப்பதாக அவர்கள் அதில் கூறியுள்ளனர்.

அதில் கூறப்பட்டிருப்பதாவது:—

காமராஜ் யோக்கியதைப் பற்றிப் பேச இந்த நடிகருக்கு என்ன தகுதி இருக்கிறது என்பதை நம்மால் புரிந்துகொள்ள முடியவில்லை.

### நெஞ்சு வெடிக்கிறது

தன்னுடைய சொந்த வாழ்க்கையிலும், அரசியல் வாழ்விலும் ஒழுக்கத்தைக் கடைபிடிக்காத இவர், காமராஜரைப் பார்த்து நாணயமில்லாதவர் என்று சொன்னதைக் கேட்டதும் நெஞ்சு வெடித்துவிடும்போல் உள்ளது. எம். ஜி. ஆரின் நாணயம் நாடே அறிந்த ஒன்றாகும்.

இதையெல்லாம் மறைக்க மற்றவர்கள்மீது அவதூறை ஏவிவிட்டு தன்னை யோக்கியனாக மக்கள் முன்னால்எடுத்துக் காட்ட நாடகமாடி வருகின்றார்.

### எச்சரிக்கை

இனி இவர் இப்படி தொடர்ந்து பேசி வருவாரேயானால் ரசிகர் மன்ற தோழர்கள் கொதித்தெழுந்து மாபெரும் போராட்டத்தை சந்திக்கின்ற சூழ்நிலையை உருவாக்க வேண்டாமென எச்சரிக்கின்றோம்.

அதுமட்டுமல்லாமல் இவர் சார்ந்திருக்கின்ற கட்சியைச் சார்ந்தவர்கள் தங்கள் மேடைகளில் காமராஜரைப் பற்றியும், நடிகர் திலகத்தை பற்றியும தனிப்பட்ட முறையில் விமர்சனம செய்து வருவதை உடனடியாக நிறுத்தும்படி கேட்டுக்கொள்கிறோம.

### அ. தி. மு. க. தலைவர்கள் சுயவாழ்க்கை

அதற்கு முற்றுப்புள்ளி வைக்காமல் தொடர்ந்து இந்த காரியம நடைபெருமானால் ராமச்சந்திரன் கட்சியைச் சார்ந்த ஒவ்வொரு தலைவர்களின் சுய வாழ்க்கை விவரங்களை ரசிகர் மன்ற தோழர்கள் ஒவ்வொரு மேடைகளிலும விமர்ச்சிப்பார்கள் என்பதை இறுதியாக தெரிவித்துக் கொள்கிறோம.

மேற்கண்டவாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது.

## கெரசின் சப்ளை அதிகரிப்பு

புதுடெல்லி, செப் 11— மாநிலங்களுக்கு இம்மாதத்திலிருந்து கெரசின் சப்ளை அதிகரிக்கப்பட்டுள்ளது.

மாநிலங்களுக்கு கெரசின் சப்ளை மீது கடந்த ஜூன் மாதத்திலிருந்து 30 சதவிகித வெட்டு இருந்து வருகிறது. இந்த வெட்டு இம்மாத முதல் தேதியிலிருந்து 20 சதவிகிதமாகக் குறைக்கப்பட்டுள்ளது. இதனால் மாநிலங்களுக்கு கெரசின் சப்ளை உயரும்.



தொழுநோய் பிச்சைக்காரர்கள் மறுவாழ்வு இல்லத்தில் அமைக்கப்பட்டுள்ள தொழிற்சாலையை பிரதமர் இந்திரா காந்தி துவக்கி வைத்தபோது பிரதமருக்கு முதல்வர் கருணாநிதி மாலையை வழங்கியபோது எடுத்த படம்

## சென்னையில் ராஜஸ்தான் அமைச்சர்

சென்னை, செப். 11— ராஜஸ்தான் சுகாதார அமைச்சர் மோகன்செட் கானி கோட்டையில் இன்று அமைச்சர் ராமச்சந்திரனைச் சந்தித்துப் பேசினார்.

அதன்பிறகு தொழிலாளர் நல அமைச்சர் ராஜாராமையும் அவர் சந்தித்தார்.

அமைச்சர் அன்பழகனையும் அவர் சந்தித்துப் பேசுவார்.

## மலிவு விலையில் அரிசி: தி.மு.க. தொழிற் சங்கம் கோரிக்கை

மதுரை, செப் 11— தொழிலாளர்களுக்கு மலிவு விலையில் அரிசி வழங்க தொழிற்சாலை நிர்வாகமே ஏற்பாடு செய்ய வேண்டும் என்று தி.மு.க. தொழிற் சங்கத் தலைவர் காட்டூர் கோபால் வற்புறுத்தியுள்ளார்.

தொழிலாளர் முன்னேற்றச் சங்கப் பேரவையில் இணைந்துள்ள 4 லட்சத்துக்கு மேற்பட்ட தொழிலாளர்களை உள்ளடக்கிய தொழிற்சங்கங்கள் இந்தக் கோரிக்கையை விடுத்துள்ளதாக அவர் கூறினார்

மலிவு விலையில் அரிசி வழங்குவதால் ஏற்படும நஷ்டத்தை நிர்வாகமே உதவித்தொகை கொடுப்பதன் மூலம ஈடு செய்ய வேண்டும என்றும அவர் சொன்னார்.

இது சமபந்தமாக விரைவில் தொழிற்சாலை நிர்வாகங்களுடன் பேச்சுவார்த்தை நடத்தப்படும என்று அவர் கூறினார்.

## கருணாநிதிக்கு கைகொடுத்த பாரதி பாட்டு

சென்னை. செப் 11— முதலமைச்சர் கருணாநிதிக்கு மகாகவி பாரதியார் ஒரு இக்கட்டான சமயத்தில் கைகொடுத்தார்.

இந்த சம்பவம் பல ஆண்டுகளுக்கு முன்பு 1956-ல் நடந்தது.

தி.மு.கழகத்தின் மாநில மாநாடு திருச்சியில் நடந்தது. அந்த மாநாட்டில்தான் தி. மு. கழகம் சட்டசபைக்கு செல்வது என்று முடிவு எடுக்கப்பட்டது.

அந்த மாநாட்டில் சத்தியவாணிமுத்து பேசும்போது (அப்போது தி. மு. கழகத்தின் ஐம்பெரும் செயலாளர்களில் ஒருவராக இருந்தார்) இந்த நாடு தாய்மார்களுக்குத்தான் சொந்தம். தாய் நாடு என்றுதான் கவிஞர்கள் சொல்லிஇருக்கிறார்கள் என்று பலமேற்கோள்களை எடுத்துக் காட்டி வாதமாக்கி நீண்ட நேரம் பேசினார்.

சத்தியவாணிமுத்து பேசிய பிறகு கருணாநிதி பேசினார். சத்தியவாணியின் பேச்சுக்கு கருணாநிதி மறுப்புத் தெரிவித்து தன் வாதத்தை நிலை நாட்டி பலத்த கை தட்டலையும் பெற்றார்.

சத்தியவாணிமுத்து பேச்சுக்கு எதிர் வாதத்துக்குப் பயன்பட்டது பாரதி பாட்டுத்தான்.

"தாய்மார்களுக்குத் தான் இந்த நாடு சொந்தம். தாய் நாடு என்று கவிஞர்கள் சொல்லி இருப்பதாக அம்மையார் சொன்னார். அதனாலேயே இது தாய் நாடு என்று மட்டும் ஆகிவிடாது.

"செந்தமிழ் நாடெனும் போதினிலே இன்பத்தேன் வந்து பாயுது - காதினிலே எங்கள் தந்தையர் நாடென்ற பேச்சினிலே ஒரு சக்தி பிறக்குது மூச்சினிலே" என்ற பாரதி பாட்டை கருணாநிதி பாடி ஆகவே இது எங்கள் "தந்தையர் நாடு" என்று சொன்னதும் மாநாட்டுப் பந்தலில் கூடியிருந்த லட்சக்கணக்கான மக்களின் கையொலி வானைப் பிளந்தது. ஒலி அடங்க ஐந்து நிமிடங்கள் பிடித்தன.

பாரதியாரின் நினைவு தினமான இன்று இச்சம்பவம் நினைவுகூரத் தக்கது.

## 'விவித பாரதி'யில் அமரகவி

சென்னை, செப். 11— பாரதி அமர தினத்தை யொட்டி அகில இந்திய ரேடியோவில் கே. ராமமூர்த்தி அமரகவி என்ற ஒரு இசை நிகழ்ச்சியை வழங்குகிறார். இன்று மாலை 5-30 மணி முதல் 6-30 மணி வரை விவிதபாரதியில் ஒலிபரப்பாகும் இந் நிகழ்ச்சியில் எம். எஸ். சுப்புலட்சுமி, எம். எல். வசந்தகுமாரி, சீர்காழி கோவிந்தராஜன், லலிதாபாரதி டி. எம். சௌந்திரராசன் ஆகியவர்கள் பாடிய பாரதி பாடல்களைக் கொண்ட பாரதி இசை மாலையாக இது ஒலிபரப்பாகிறது.

## பைல் எரிப்பு: பக்தவத்சலம் விளக்கம்

—3-ம் பக்கம்

உணவு இறக்குமதி செய்வதை

# பிச்சை எடுக்கிறார்கள் என்று கேலி செய்வதா? பிரதமர் இந்திரா வேதனை

சென்னை, செப். 11—உணவு நெருக்கடியின்போது வெளிநாடுகளிலிருந்து உணவு இறக்குமதி செய்வதைப் பார்த்து, பிச்சை எடுக்கிறார்கள் என்று கேலி செய்கிறார்களே என்று பிரதமர் இந்திரா காந்தி வேதனையுடன் குறிப்பிட்டார்.



ஆனால், ரஷ்யா, சீனா போன்ற வல்லரசுகளே அமெரிக்கா போன்ற நாடுகளிலிருந்து உணவு இறக்குமதி செய்கிறார்கள் என்பதை அவர்கள் உணர வேண்டும் என்றும் இந்திரா கூறினார்.

சென்னை மெரினா கடற்கரை கூட்டத்தில் பிரதமர் இந்திரா காந்தி பேசியதாவது:—

நான் உங்களை நீண்டகாலத்திற்கு பிறகு சந்திக்க வாய்ப்பு கிடைத்ததற்கு பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

நான் இங்கு வந்து உங்களிடையே பேசிவிட்டால்மட்டும பிரச்சனைகள் தீர்ந்துவிடாது. நாங்கள் எடுக்கிற நடவடிக்கைகள் மூலமாகவும் பிரச்சினைகள் தீர்நதுவிடாது. மக்களும் ஒன்று சேர்ந்து ஒத்துழைத்தால்தான் பிரச்சினைகளை தீர்க்க முடியும்.

இன்றுள்ள விலைவாசி ஏற்றமானது நம் நாட்டில் மட்டுமல்ல, உலக நாடுகள் அனைத்திலும் உள்ளது. அமெரிக்காவில் சென்ற ஒரு மாதத்தில் மட்டும் சர்க்கரை விலை 40 சதவீதம் உயர்ந்திருக்கிறது.

எல்லா நாடுகளிலும் விலைவாசிப் பிரச்சினை இருக்கிறது என்று கூறி, நான் பிரச்சினைகளிலிருந்து ஓடி ஒளிந்துக் கொள்வதாக நினைக்க வேண்டாம்.

பிரச்சினைகள் எப்படிப்பட்டவை என்று தீவிரமாக சிந்தித்து அரசு நடவடிக்கை எடுப்பதற்கான முயற்சிகளை எடுத்து வருகிறது. சர்வதேச நெருக்கடி, இயற்கை கோளாறு போன்றவற்றால் பிரச்சினைகள் தோன்றுவதை மக்களும் சிந்தித்து ஆராய வேண்டும். மக்கள் இப்பிரச்சினைகளை உணர்ந்துகொண்டால்தான் சுமுகமான முறையில் பிரச்சனைகளையும் கஷ்டங்களையும் தீர்க்க முடியும்.

## திசை திருப்பும எதிர்க்கட்சிகள்

ஆனல் துரதிஷ்டவசமாக எதிர்கட்சியினர் மக்களை திசை திருப்பி விடுகின்றனர். அதனல் நம்மை பலவீனப்படுத்த நினைக்கின்றனர். பலம் வாய்ந்த மத்திய அரசு இருந்தால்தான் அந்த கஷ்டங்களை சமாளிக்கின்ற சக்தி இருக்கும்.

ஒரு நாடு முன்னேற்றப் பாதையை நோக்கிச் செல்லும்பொழுது, பதவியும், பண பலமும் மிக்க உட்சக்திகள் முட்டுக்கட்டை போட நினைக்கின்றன. ஆனல் அடிமைபட்டிருந்த நம் நாடு முன்னேற்றமடைவதைப் பார்த்து, வல்லரசுகள் பொறாமைப்படுகின்றன. வங்கதேச விவகாரத்தில் நாம் வெற்றியடைந்தபோதும், அணுசக்தி பரிசோதனையின் போதும் இதை நாம் புரிந்து கொண்டோம். அணுசக்தியை ஆக்கசக்திக்கே பயன்படுத்துவோம் என்று பல ஆண்டுகளாகவே நாம் சொல்லி வருகிறோம்.

நாம் அண்டை நாடுகளோடு நேசக்கரம் நீட்டி, அவர்களுடைய ஒத்துழைப்பால் பல பிரச்சினைகளை தீர்த்து இருக்கிறோம். ஆனல், தேசத்தின் மான, மரியாதை எவ்விதத்திலும் பாதிக்கப்படாத வகையிலே செய்யப்பட்டிருக்கின்றது என்பதைக் கூற விரும்புகிறேன்.

சிக்கிம் பிரச்சினையில் பல மாதிரியாக பேசி, மக்களின் கஷ்டங்களைத் தீர்க்கும் நடவடிக்கையிலிருந்து திசை திருப்ப முயற்சித்தார்கள். அது பற்றி பாராளுமன்றத்தில் அமைச்சர் விளக்கமாகக் கூறியிருக்கிறார்.

இன்று நம்மைஎதிர்நோக்கியுள்ளவை இரண்டு பிரச்சினைகள். ஒன்று அத்தியாவசிய பொருள்களின் விலையேற்றம். இவைகளின் விலையேற்றத்திற்கு காரணம் அவை வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்படுவதுதான். இறக்குமதி செய்யப்படும் நாடுகளிலேயே இவை விலையேறியதால், அவற்றை நாம் தடுக்க முடியாது. மற்றொன்று உணவுப் பிரச்சினை. உணவுப் பொருள்கள் போன்றவற்றில் உற்பத்தியை பெருக்கி, உணவுப் பொருள்கள், துணிவகைகள் ஆகியவற்றை தேவையான அளவுக்கு பெருக்கியிருக்கிறோம் என்று பெருமையாக கூறிக் கொள்ள முடியும்.

## ஏழைகளே அதிகம்

இன்று நம் நாட்டில் உள்ளவர்களில் பெரும்பாலோர் ஏழை மக்கள். அவர்களைப் பார்த்து உங்கள் தேவைகளை குறைத்துக் கொள்ளுங்கள் என்று கூற முடியாது.

ஆனல் இவ்வளவு விலையேற்றத்திலும், பணக்காரர்கள் தேவைக்கு அதிகமாக வாங்குவதைப் பார்க்கிறோம். அந்த பணக்காரர்களை 'உங்கள் நாட்டு மக்களுக்காக உங்கள் தேவைக்கு மேல் வாங்காதீர்கள்' என்று கேட்டுக் கொள்கிறேன்.

இப்பொழுது மக்கள் தங்கள் தேவைகளைக் கேட்கத் தெரிந்துகொண்டு விட்டார்கள். மக்களிடையே இப்பொழுது மறுமலர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. நாம் எதிர்பார்த்ததற்கு மேலாக அவர்கள் வெகுவேகமாக தங்களின் தேவைகளை கேட்க ஆரம்பித்து விட்டார்கள்.

## கேலி செய்கிறார்களே!

உணவுப் பற்றாக் குறையின் போது, வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்வதைப் பார்த்து, பிச்சை எடுப்பதாக கேலி செய்கிறார்கள். ஆனல் சீனா, ரஷ்யா போன்ற வல்லரசுகளே, அமெரிக்கா, கனடா போன்ற நாடுகளிலிருந்து உணவுப் பொருள்களை இறக்குமதி செய்கின்றன. இப்படிஎடுத்துக்காட்டாக வெளிநாடுகளைக் கூறித் தப்பித்துக்கொள்ள முடியாது.

மக்கள் தொகை வளர்ந்து கொண்டிருப்பதும், பற்றாக் குறைக்கு ஒரு காரணமாகும். இவற்றுக்கு நாம் ஜனநாயக முறையில்தான் தீர்வு காணவேண்டும்.

பல சமயங்களில் வெளிநாட்டு பத்திரிகை நிருபர்கள் 'ஜனநாயக முறை தளர்ந்து

(4-ம் பக்கம் பார்க்க)

## புகைப்படம் பரிசுவேண்டாம்: இந்திரா அறிவிப்பு

கொச்சி, செப். 11—ஓர் அமைப்புக்கு அல்லது தொழிற்சாலைக்கு பிரதமர் இந்திரா விஜயம் செய்யும் போது புகைப்படங்கள் எடுத்து அப் புகைப் படங்கள் அடங்கிய ஆல்பத்தைப் பிரதமரிடம் அளிக்கும் வழக்கம் இருந்து வருகிறது. காகிதப் பஞ்சம் காரணமாகவும், போட்டோ பிலிம் பற்றாக்குறை காரணமாகவும் இந்த வழக்கத்தைக் கைவிடும்படி மக்களை பிரதமர் இந்திரா காந்தி கேட்டுக் கொண்டுள்ளார்.

நள்ளிரவில் நடந்த ஓட்டெடுப்பு

# லைசென்ஸ் ஊழல் விசாரணை கோரிக்கை: மக்கள்சபை நிராகரிப்பு

புதுடெல்லி, செப். 11—இறக்குமதி லைசென்ஸ் அளித்தது சம்பந்தமான ஊழலை எம். பி.-க்களைக் கொண்டு ஆராயவேண்டும் என்று கோரி மக்கள் சபையில் எதிர்க்கட்சியினர் கொண்டுவந்த தீர்மானம் தோற்றது.

இத்தீர்மானத்தை ஆதரித்து 34 பேரும் எதிர்த்து 179 பேரும் ஓட்டளித்தனர்.

எதிர்க்கட்சியினர் பல நாட்கள் விடாது வற்புறுத்தியதன் விளைவாக இத்தீர்மானத்தின் மீது விவாதம்நடந்தது. மாலை 4 மணிக்குத் துவங்கிய இந்த விவாதம் காரசாரமாக இருந்தது. சுமார் 8 மணி நேர விவாதத்துக்குப் பிறகு நள்ளிரவில் ஓட்டெடுப்பு நடந்தது.

இந்த விவாதம் முடிந்ததும் சபைக் கூட்டம் தேதி குறிப்பிடாமல் ஒத்திவைக்கப்பட்டது.

இத்தீர்மானத்தின் மீது விவாதம் நடப்பதற்காகவே மக்கள் சபைக்கூட்டம் நேற்றும் நடந்தது.

பிரதமர் இந்திரா சென்னை வந்துவிட்டதால் விவாதத்தின் போது அவர் சபையில் இல்லை. எதிர்க்கட்சி உறுப்பினர்கள் இது பற்றிக் குறிப்பிட்டு பிரதமர் இந்திரா இல்லாததுஏனென்று கேட்டனர்.

விவாதத்தின்போது எதிர்க்கட்சி உறுப்பினர்கள் மத்திய ரெயில்வே மந்திரி எல். என். மிஸ்ராவைக் கடுமையாகத் தாக்கினர். "அவர்தான் இந்த ஊழலின் மூலகர்த்தா" என்று ஜனசங்கத் தலைவர் வாஜ்பாயி கூறினார்.

## மற்றொரு வாட்டர்கேட்

மத்திய அரசு இந்த ஊழல் பற்றி மத்திய புலனாய்வுத் துறை மூலம் நடத்தும் விசாரணை மீது தனக்கு நம்பிக்கை இல்லை என்று வாஜ்பாயி கூறினார். இந்த ஊழலை வாஜ்பாயி அமெரிக்காவில் நடந்த வாட்டர்கேட் ஊழலுடன் ஒப்பிட்டுப் பேசினார்.

ஆளுங்கட்சி உறுப்பினர் சந்திரஜித் யாதவ் பேசுகையில் ஊழல் எதுவும் நடைபெறவில்லை என்றார்.

ஜோதிர்மய்பாசு (இடது கம்யூனிஸ்டு) பேசுகையில் எல். என். மிஸ்ரா மீது கடும் புகார்கள் உள்ளதாகக் குறிப்பிட்டார்.

எஸ்.என். மிஸ்ரா (பழைய காங்கிரஸ்) பேசுகையில் இதனை பிரிட்டனில் நடந்த 'புரொபியூமா' ஊழலுடன் ஒப்பிட்டார்.

இரா. செழியன் (தி.மு.க.) பேசுகையில் இந்த ஊழல் பற்றி பல முக்கிய கேள்விகளை எழுப்பி அவற்றுக்கு விடை கோரினார். மத்திய புலனாய்வுத் துறை தனது விசாரணையை அறிக்கையை இம்மாதம் 30-ந் தேதிக்குள் முடிக்கவேண்டும் என்று அவர் கேட்டுக்கொண்டார்.

மந்திரி தீட்சித் விவாதத்தின் நடுவே பேசுகையில் மத்திய புலனாய்வுத் துறையின் அறிக்கை விரைவில் கிடைக்கும் என்று சொன்னார். அதற்குப் பிறகு அவசியமானால் பார்லிமெண்ட் குழு மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கலாம் என்றார் அவர்.

இவ்வித விவகாரத்தில் பார்லிமெண்ட் குழு மூலம் விசாரிப்பதானல் பின்னர் அது மோசமான முன்னுதாரணமாகிவிடும். பின்னர் காலமெல்லாம் அதற்காக நாம் வருந்த வேண்டி நேரிடும் என்றார் மந்திரி தீட்சித்.

பின்னர் எதிர்பார்த்தபடி இத் தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டு தோற்றது.

## பைல் எரிப்பு இல்லை: அரசு மறுப்பு

சென்னை, செப் 11—சென்னை கோட்டையில்சிலமுக்கியமான பைல்கள் எரிக்கப்பட்டதாகக் கூறுவது உண்மைக்குப் புறம்பானது என்று அதிகாரபூர்வமாக மறுக்கப்பட்டுள்ளது.

சொந்த அக்கறை கொண்ட சில தரப்பினர் வேண்டுமென்றே இவ்விதமான பேச்சைக் கிளப்பிவிட்டுள்ளனர். உண்மையில் எந்த பைலும், அரசாங்க தஸ்தாவேஜும் எரிக்கப்படவில்லை என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.

இது பற்றி அரசாங்க அறிக்கை ஒன்றில் கூறப்பட்டுள்ளதாவது;—

சென்னை கோட்டையில் கடந்த சனிக்கிழமை யன்று பழைய விலங்கு போக்குவரத்து லேன் பகுதியில் தற்செயலாக ஒரு தீ விபத்து ஏற்பட்டது. அப்பகுதியில் 28 பழைய கொட்டகைகள் உள்ளன. அரசு தலைமைச் செயலகத்தின் பல்வேறு இலாகாக்களும பல ஆண்டுகளாக பழைய குப்பைக் காகிதத்தையும, பயனற்ற நாற்காலி, மேஜை போன்றவற்றையும பழுதுபார்க்கமுடியாத பொருட்களையும் போட்டு வைக்க இக்கொட்டகைளைப் பயன்படுத்தி வருகின்றன. இவை அவ்வப்போது ஏலம் விடப்படுகின்றன.

கடைசியாக ஆகஸ்ட் 20-ந் தேதியும், 28ந் தேதியும் இக் கழிவுப பொருட்கள் ஏலம் விடப்பட்டன. இதன்மூலம் ரூ. 9338 கிடைத்தது. ஏலம் எடுத்தவர் இவற்றை எடுத்துச் சென்றனர்.

இத் தீ விபத்து பற்றிய செய்தியை பெரும்பாலான பத்திரிகைகள் சரியாகாப் பிரசுரித்திருக்க, சில பத்திரிகைகள் தவறான செய்திகளை வெளியிட்டுள்ளன. சில தரப்பினர் இதுபற்றி தவறான எண்ணம் ஏற்படும்படியும் பேசியுள்ளனர். சில முக்கியமான தஸ்தாவேஜுகள் வேண்டுமென்றே எரிக்கப்பட்டதாக பேசப்பட்டுள்ளது. இது உண்மையல்ல. முற்றிலும் தவறானது. எந்த பைலும், தஸ்தாவேஜும் எரிக்கப்படவில்லை.

கொட்டகைகளில் போட்டு வைக்கப்பட்டிருந்த குப்பைக் காகிதமும், பயனற்றபொருட்களும்தான் தற்செயலாகத் தீப்பற்றி எரிந்தன.

இவ்வாறு கூறப்பட்டுள்ளது.

விஷ ஊசி வழக்கு

# சாரதி கொடுத்த தங்கக் கட்டிகளை விற்றுத்தந்தேன்: கார் டிரைவர் சாட்சியம்

சென்னை, செப். 11—பார்த்தசாரதி என்னிடம் தங்கக் கட்டிகளைக் கொடுத்து விற்றுவரச் சொன்னார். நான் 3 தங்கக் கட்டிகளை விற்றுக கொடுத்திருக்கிறேன் என்று குமார் என்பவர் விஷ ஊசி வழக்கில் சாட்சியம் கூறினார்.

சுங்க அதிகாரி போல் நடித்து விஷஊசி போட்டு 7 பேர்களை கொலைசெய்ததாக சென்னை ஜார்ஜ்டவுன் மருந்துக்கடைக்காரர் வைத்தீஸ்வரன்முதலிய 8 பேர் மீதுள்ள வழக்கு சென்னை செஷன்ஸ் கோர்ட்டில் நீதிபதி விஜயரங்கம் முன்னிலையில் நேற்று தொடர்ந்து விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

போலீஸ்தரப்பில் 203-வது சாட்சியாக சித்தூர் நகருக்கு அருகிலுள்ள பிலூர் என்ற கிராமத்தைச் சேர்ந்த ஒரு பெட்ரோல் கம்பெனியில் பணிபுரியும் ஊழியரான அப்துல் ரஷீத் நேற்று சாட்சியம் அளித்தார்.

அவர் கூறியதாவது:—

"26-4-72-ந் தேதியன்று பார்த்தசாரதி, ஒரு அம்பாசிடர் காரில் வந்து காருக்கு பெட்ரோல் போடச் சொன்னார். தாம் திசைதவறி வந்து விட்டதாகவும திருப்பதிக்கு தாங்கள் பிரார்த்தனைக்குச் செல்வதாகவும் கூறிச் சென்று விட்டார், என்றார் அப்துல் ரஷீத்.

பின்னர் அவர் குறுக்கு விசாரணை செய்யப்பட்டார்.

## நாய்ச் செலவு ரூ. 100

அடுத்து போலீஸ்தரப்பு 204 வது சாட்சியாக பார்த்தசாரதியின் வீட்டில் வேலை பார்த்த பாக்கியம் என்ற பெண் சாட்சியம் அளித்தார்.

அவர் கூறியதாவது:—

எனக்கு அலமேலு என்ற மகள் இருக்கிறாள். பார்த்தசாரதி வீட்டில் நானும் அவளும் வேலைசெய்து வந்தோம். அந்த வீட்டில் பார்த்தசாரதி, அவருடைய மனைவி ஜமுனா, குமார் [பார்த்தசாரதியின் கார் டிரைவர்) ஆகியோர் குடியிருந்தனர்.

பார்த்தசாரதியையும், குமாரையும் சாட்சி அடையாளம் காட்டினார்.

பார்த்தசாரதிக்கு 3 புதல்விகளும், ஒரு புதல்வரும் உண்டு. அந்த பிள்ளைகள் அனைவரும் கல்யாணி கான்வென்ட் பள்ளியில் படித்துவந்தனர். வீட்டில் அவர்களுக்கு ஒரு ஆங்கிலோ இந்தியப் பெண் பாடம் கற்றுக் கொடுத்துவந்தார்.

ஒரு பெரிய நாயை பார்த்தசாரதி வளர்த்துவந்தார். அதற்கு மாதம் ரூ. 100 செலவு செய்துவந்தார்.

அவருக்கு பெரிய கார் இருந்தது. ஆடம்பரமாக செலவு செய்துவந்தார்.

அவருடைய வீட்டிற்கு அயூபும், வைத்தீஸ்வரனும் அடிக்கடி வந்தனர். பார்த்தசாரதி அடிக்கடி வெளியில் சென்றிருப்பார்.

ரகசிய போலீசார் என்னை வந்து விசாரித்தபோது இது பற்றி நான் கூறினேன்.

பின்னர் அவர் குறுக்கு விசாரணை செய்யப்பட்டார்.

## அயூப் வீட்டில் சாமான்கள் பறிமுதல்

அடுத்து போலீஸ் தரப்பு 205வது சாட்சியாக எஸ். செல்லையா பிள்ளை என்பவர் விசாரிக்கப்பட்டார். வழக்கில் 4-வது எதிரியான அயூப் கானின் சொந்த ஊர் வெளிப்பட்டணம். கிராம அதிகாரியாக இவர் பணியாற்றுகிறார். ராமநாதபுரம் மாவட்டம் பேராவூர் தொகுதியில் வெளிப்பட்டணம் இருக்கிறது. இரகசிய போலீசார் அயூப்கானின் வீட்டுக்கு வந்து மின்சார விசிறி, டிரான்சிஸ்டர் ரேடியோ, காட்ரெஜ் பீரோ, கடிகாரம் மற்றும் எவர்சில்வர் பாத்திரங்கள் ஆக 13 சாமான்களை தன் முன்னிலையில் கைப்பற்றி சென்றதாக செல்லையா பிள்ளை சாட்சியமளித்தார்.

எதிரி தரப்பு வக்கீகள் அவரை குறுக்கு விசாரணை செய்தனர். இதற்கு முன்னதாக எதிரி அயூப்கானுக்கு உடல் நிலை சரியில்லையென்றும், அவருடைய தாயார் நோய் வாய்ப்பட்டிருப்பதாகவும் ஆகவே எதிரியை ஜாமீனில் விடக்கோரி கொடுக்கப்பட்ட மனுவை நீதிபதி விஜயரங்கம் தள்ளுபடி செய்தார்.

அடுத்து திருத்தணியில் பாக்யலட்சுமி ரைஸ்மில்லின் பாகஸ்தரான லோகநாத செட்டியார் போலீஸ் தரப்பு 206-வது சாட்சியாக விசாரிக்கப்பட்டார். 1972ம் ஆண்டு நவம்பர் மாதம் ஒரு நாள்காலை 10 மணிக்கு நீல நிறமான அம்பாசிடர் கார் (MSR 9195) ஒன்றை ரைஸ் மில்லின் காம்பவுண்டுக்குள் விட்டுவிட்டு திருப்பதியிலிருந்து வரும்போது பழுதடைந்துவிட்டவாகவும், சென்னை சென்று வேறொரு காரை கொண்டுவந்து இழுத்துச் செல்வதாகவும் 4 பேர் சொல்லிச் சென்றதாகவும் பின்னர் இரவில் சொல்லிக் கொள்ளாமலே காரை எடுத்துச் சென்றுவிட்டதாகவும் கூறினார்.

அவரை எதிரி தரப்புவக்கீல் குறுக்கு விசாரணை செய்தார்.

அடுத்து போலீஸ் தரப்பு 207-வது சாட்சியாக எதிரி பார்த்தசாரதியுடன் இருந்த குமார் (கார் ட்ரைவர்) சாட்சியமளித்தார். அவர் கூறியதாவது;—

நான் சென்னை-24, ரங்கராஜபுரத்தில் நெ. [illegible]0-ல் குடியிருக்கிறேன். எஸ்.எஸ். எல்.

4-ம் பக்கம் பார்க்க

## நியூயார்க் பருத்திமார்க்கெட்

நியூயார்க், செப். 10—

| | |
|---|---|
| ஆரம்ப விலை | 50-50 |
| முடிவு விலை | 49·41 |



# நிக்சனுக்கு மன்னிப்பா? அமெரிக்க ஜனதிபதிக்கு எதிராக ஆர்ப்பாட்டம்

வாஷிங்டன், செப் 11— வாட்டர்கேட் ஊழல் சம்பந்தப்பட்ட குற்றங்களிலிருந்து முன்னாள் ஜனதிபதி நிக்சனுக்கு மன்னிப்பு அளிக்கப்பட்டதைக் கண்டித்து அமெரிக்க புதிய ஜனதிபதி போர்ட் முன்பாக ஆர்ப்பாட்டம் நடத்தப்பட்டது.

நிக்சனுக்கு அமெரிக்க ஜனதிபதி போர்ட் முழு மன்னிப்பு அளித்ததை எதிர்த்து நூற்றுக்கணக்கான மக்கள் இவ்விதம் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

"நீதி செத்தது நீதி செத்தது" என்று அவர்கள் கோஷமிட்டனர். "நிக்சனை கூண்டில ஏற்று" என்றும் அவர்கள் கோஷமிட்டனர்.

ஜனதிபதி போர்ட் போக்குவரத்து மாநாட்டில் பேசிவிட்டு வந்தபோது இந்த ஆர்ப்பாட்டம் நடந்தது.

ஜனதிபதி போர்ட் பதவி ஏற்று ஒரு மாதம் ஆகிறது. அவருக்கு எதிராக ஆர்ப்பாட்டம் நடத்தப்படுவது இதுவே முதல் தடவையாகும்.

நிக்சனுக்கு மன்னிப்பு அளிக்கப்பட்டதை எதிர்த்து ஏற்கெனவே உயர் அதிகாரிகள் சிலர் ராஜிநாமா செய்துள்ளனர்.

இதற்கிடையே நிக்சன் உற்சாகமாக இருப்பதாகவும், ஒரு புத்தகத்தை எழுதிக் கொண்டிருப்பதாகவும் அவருடைய சேவகர் கூறினார். ஒரு நாள்நான் எல்லாவற்றையும் வெளியிடப் போகிறேன் என்றார் அவர்.

கலிபோர்னியா மாநில வக்கீல்கள் சங்கத்திலிருந்து ராஜிநாமா செய்ய நிக்சன் திட்டமிடுவதாக அவருடைய வக்கீல் கூறினார். நிக்சன் மீது வக்கீல்கள் சங்கம் ஒழுங்கு நடவடிக்கை எடுக்ககூடும என்க் கூறப்படுகிறது.

# யானைகளின் கால்பந்தாட்ட போட்டி

பேங்காக், செப். 11—மிக அதிசயமான வகையில் யானைகளின் கால் பந்தாட்டப் போட்டி தாய்லாந்து நாட்டில் நடந்தது.

நூற்றுக் கணக்கான மக்கள் கூடி இப்போட்டியைக் கண்டுகளித்தனர். பௌத்த கோயிலை அடுத்த ஒரு மைதானத்தில் இப்போட்டி நடந்தது.

ஒரு தரப்பில் 5 யானைகளும், எதிர்த்தரப்பில் 5 யானைகளும் இப்போட்டியில் பங்குகொண்டன. யானைகள் கட்டுமீறிப் போய்விடக் கூடாது என்பதற்காக மாவுத்தர்கள் யானைகள்மீது அமர்ந்து அவற்றை அவ்வப்போது கட்டுப்படுத்தி ஓடச் செய்தனர். யானைகள் அங்கு பந்தை உதைக்க அங்குமிங்கும் ஓடியபோது மைதானமே அதிர்ந்தது.

யானையின் உருவத்துடன் ஒப்பிடும்போது சின்னஞ்சிறியதான பந்தை அவைஉதைத்த காட்சி வேடிக்கையாகவும் இருந்தது.

இப்போட்டியின் கடைசியில் எந்த தரப்பையும் சேர்ந்த யானையும் கோல் போடவில்லை. எனவே போட்டி டிராவில் முடிந்தது.

இந்த யானைகள் கால் பந்தை அடித்து விளையாடப் பழக்கப்பட்டவை. இவை வடக்கிலுள்ள சியாங்மே மாகாணத்திலிருந்து தெற்கிலுள்ள புகெட் மாகாணத்துக்குப் போய் கால் பந்தாட்டப் போட்டியில் பங்கு கொள்ள இருக்கின்றன. வழியில் அவை பேங்காக்கில் ஒரு போட்டியில் கலந்து கொண்டன.

# புது காங்கிரசில் காமராஜர் சேருவாரா? இந்திரா அளித்த பதில்

சென்னை,செப். 11— காமராஜர் புது காங்கிரசில் சேருவாரா என்ற கேள்விக்கு இந்திரா பதிலளித்துள்ளார். "இந்த விஷயம் நாங்கள் இரு வரும் சம்பந்தப்பட்ட விஷயம்'' என்றார் இந்திரா காந்தி.

சென்னையிலிருந்து நேற்று டெல்லிக்குப் புறப்பட்டுச் சென்ற பிரதமர் இந்திரா காந்தி விமான நிலையத்தில் நிருபர்களிடம் பேசுகையில் இவ்வாறு கூறினர்.

புது காங்கிரஸ் கட்சியின் கொள்கைத் திட்டத்தில் நம்பிக்கை கொண்டவர்கள் புது காங்கிரஸ் கட்சியில் சேர முன்வந்தால் வரவேற்போம் என்று நேற்று முன்தினம் வடசென்னையில் பிரதமர் இந்திரா காந்தி பேசியதை நிருபர்கள் சுட்டிக்காட்டி ''காமராஜர் புதுகாங்கிரசில் சேருவார் என்று எதிர்பார்க்கிறீர்களா?'' என்று கேட்டனர்.

இதற்கு இந்திராகாந்தி பதிலளிக்கையில் ''புது காங்கிரஸ் ஊழியர்களைப் பொறுத்தவரையில் அவர்கள் புது காங்கிரசில் யார் சேருவார்கள் யார் சேரமாட்டார்கள் என்பது பற்றிக் கவலைப்படாமல் தங்கள் பணியில் தொடர்ந்து ஈடுபட வேண்டுமென்று நான் கூறினேன்'' என்று கூறினர்.

காமராஜரைப்பற்றி நிருபர்கள் மீண்டும் கேட்டனர். இதற்கு இந்திரா பதில் அளிக்கையில் 'அது தனி விஷயம்' என்றார்.

அந்த தனி விஷயம் பற்றி உங்கள் பதில் என்ன என்று நிருபர்கள் விடாமல் கேட்டனர்.

இந்திரா - அது நாங்கள் இருவர் சம்பந்தப்பட்ட விஷயம்.

காமராஜர் தான் இதில் முன் முயற்சி எடுக்க வேண்டுமா என்ற அர்த்தத்தில் ஒரு நிருபர் ''பந்து காமராஜர் தரப்பில் தான் இருக்கிறதா'' என்றார்.

இந்திரா:— நாங்கள் பந்தாட்டத்தில் ஈடுபட்டிருப்பதாக நான் நினைக்கவில்லை.

காஞ்சியில் சங்கராச்சாரியாரை சந்தித்ததுபற்றி நிருபர்கள் கேட்டபோது ''நான் அவரைச் சந்தித்தேன். அதற்குமேல் கூறுவதற்கு எதுவுமில்லை'' என்றார் இந்திரா.



டிக்கா ஏ. எஸ். பெடி, தலைவர், ஐக்கிய தோட்ட அதிபர்கள் சங்கம்.

## இந்திராவிடம் மாணவர்கள் 10 கோரிக்கைகள்

சென்னை, செப். 11— சென்னை அனைத்துக் கல்லூரி மாணவர் பேரவை சார்பில் பிரதமர் இந்திரா காந்தியிடம் மகஜர் கொடுக்கப்பட்டது அல்லவா? அந்த மகஜரில் தெரிவிக்கப்பட்டிருந்த 10 கோரிக்கைகள் வருமாறு:

அரசினர் கல்லூரி வசூலிக்கும் கட்டண விகித அளவுக்கே தனியார் கல்லூரிகளும ஒரே மாதிரியாக கட்டணங்கள் வசூலிக்கவேண்டும.

நோட்டுப் புத்தகங்கள் அடக்க விலைக்கு வழங்கப்பட வேண்டும் வேலையில்லாத படித்த பட்டதாரிகளுக்கு வேலை கிடைக்கும்வரை எந்த வித ஜாமீன் பொறுப்பும் கோராமல் கடன்கள் வழங்கப்பட வேண்டும்.

கட்டாய நன்கொடை வசூலிக்கும் கல்லூரிகளின் அங்கீகாரத்தை பல்கலைக் கழகம் ரத்து செய்ய வேண்டும். நடைமுறையில் வேலைவாய்ப்புக் கிடைக்கத் தக்க வகையில் கல்வித் திட்டம் அமையவேண்டும்.

மாணவர்களை கல்லூரிகளில் சேர்க்கும் குழுவில் மாணவப் பிரதிநிதிகளுக்கும் இடமளிக்க வேண்டும். பல்கலைக்கழக நிர்வாகத்தில் மாணவர்களுக்கு பிரதிநிதித்துவம் வேண்டும். டிப்ளமோ படிப்பை பட்டப்படிப்பாக மாற்ற வேண்டும்.

மாணவர் விடுதிக்கான உணவுப் பொருள்களை நியாய விலைக்கு வழங்க வேண்டும். வாழ்க்கைக்குத் தேவையற்ற பாடங்களை நீக்கிவிட்டு, தேவையான பாடங்களை மட்டும் கற்பிக்கும் பாடத்திட்டம் வகுக்க வேண்டும். இவ்வாறு மகஜரில் கூறப்பட்டுள்ளது.

## தாம்பரத்தில் வரவேற்பு

தாம்பரம், செப். 11— பிரதமர் இந்திரா காந்திக்கு தாம்பரம் நகராட்சி மன்றம் சிறப்பான வரவேற்பு அளித்தது.

நேற்று காலை காஞ்சீபுரத்திலிருந்து பரனூர் தொழுநோய் பிச்சைக்காரர் மறு இல்லத்துக்கு வந்து அங்கு நிகழ்ச்சியில் கலந்து கொண்டு விட்டு, தாம்பரம் வந்து சேர்ந்தார். அவருடன் முதலமைச்சர் கருணாநிதியும் வந்தார்.

வழிநெடுகிலும் ஏராளமான மக்கள் கூடி நின்று வரவேற்றனர். தாம்பரத்தில் சுமார் 25 ஆயிரம் பேர் கூடிநின்று வரவேற்றனர்.

தாம்பரம் நகராட்சி சார்பிலும், நகர இந்திரா காங்கிரஸ் சார்பிலும் வரவேற்பு வாசித்தளிக்கப்பட்டது.

தாம்பரம் நகராட்சி தலைவர் தா. மு. தனபால் வரவேற்பு இதழை வாசித்தளித்தார்.

### சந்தனத்தேர்

சந்தனக் கட்டையால் ஆன இரண்டடி உயர தேர் ஒன்று தாம்பரம் நகராட்சி சார்பில் இந்திரா காந்திக்கு அளிக்கப்பட்டது. அதனுள் சங்கராச்சாரியர் உருவம் பொறிக்கப்பட்டிருந்தது.

இந்திராகாந்தி வருகையை முன்னிட்டு தாம்பரம் சுற்றுவட்டாரங்களிலுள்ள பள்ளிகளுக்கெல்லாம் விடுமுறை அளிக்கப்பட்டிருந்தது.

வரவேற்பைப் பெற்றுக் கொண்டு, இந்திரா காந்தி மீனம்பாக்கம செல்லும வழியில், குரோம்பேட்டை, பல்லாவரம, மீனம்பாக்கம முதலிய இடங்களில் எல்லாம சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது.

தாம்பரம் ஜி. எஸ். டி. ரோடில் தனியாக அமைக்கப்பட்டிருந்த பந்தலில் வரவேற்பு நிகழ்ச்சி நடைபெற்றது.

துணைத்தலைவர் தாம்பரம் மணி மற்றும் நகரசபை உறுப்பினர்கள் வரவேற்பு நிகழ்ச்சியில் கலந்து கொண்டனர்.

## 72 மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம்

சென்னை, செப். 11— தமிழ் நாடு கல்வி நிறுவனம இது வரை 72 மாணவ, மாணவிகளுக்கு உபகாரச் சம்பளம் வழங்கியுள்ளது.

கல்லூரிப் படிப்பு படிப்பதற்காக அவர்கள் ஒவ்வொருவருக்கும ஆண்டுக்கு 1,500 ரூபாய் வீதம உதவிப் பணம வழங்கப்படுகிறது.

இந்தக் கல்வி நிறுவனத்திற்கு கவர்னர் கே. கே. ஷா தலைவராக இருக்கிறார்.

## சென்னை மார்க்கெட்

சென்னை, செப். 11—

**தங்கம்**

(24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 518 00
(22 காரட்) சில்லரை கிராம் ரூ. 49 25

**வெள்ளி**

பார் வெள்ளி (1 கி. கி.) ரூ. 1045 00
உள்ளூர் 1035 00
(வெள்ளி 10 கிராம்) ரூ. 10 55

**மணிலாப்பயறு**

மாரிகால பட்டாணி தீரவில்லை
மொத்த விலை தீரவில்லை

**மணிலா எண்ணெய்**

மொத்த விலை ரூ. 725 00
சில்லரை விலை ரூ. 7 75

**விளக்கெண்ணெய்**

(100 கி. கி.) சென்னை கிடங்குடெலிவரிதிருப்பத்தூர் மொத்த விலை ரூ. 620 00
சேலம் தாமரை அன்னம் மார்க் (16 05 கி. கி.) ரூ. 96 00

**தேங்காய் எண்ணெய்**

(16.06 கி. கி.) டின் எம்.எஸ்.மார்க் ரூ. 193 00
முதல் ரூ. 195 00

**நல்லெண்ணெய்**

17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 155 00
விற்பனை வரி தனி
சில்லரை கிலோ 1-க்கு ரூ. 9 50

**கடலைப்பிண்ணாக்கு**

கி.கி. கொண்ட மூட்டைக்கு 70 எக்ஸ்பெல்லர் ரூ. 85 00

## குயிலின் குரல்

**கவிஞர் கண்மதியன்**

சங்கத் தமிழாலே
சந்தக் கவி யாத்தே
எங்கும் செந்தமிழின்
எழுச்சி பெறச்செய்தான் பாரதி!—அதில்
இன்ப முறச்செய்தான் பாரதி!!

அன்னை பாரதத்தின்
அடிமைத் தளையறுக்க
தன்னைத் தந்துநாளும்
தயங்கா துழைத்திட்டான் பாரதி!—அதில்
தனையே அழித்திட்டான் பாரதி!!

சாதி மதங்களையும்
சாடிச் சமுதாயக்
காதல் வாழ்வுநெறிக்
கவிதை படைத்திட்டான் பாரதி!-மண்ணைக்
கவியில் அடைத்திட்டான் பாரதி!!

ஆண்பெண் இருவருமே
அவனி தனில்சமமே;
ஏன்தான் பெண்ணடிமை
இங்கே எனக்கேட்டான் பாரதி! பெண்ணை
எழுந்து நடக்கவிட்டான் பாரதி!!

மெழுகும் ஒளிசிந்தி
மேனி இழந்தாற்போல்,
மிளிரும் நாட்டிற்கு
மெழுகாய் அழிந்திட்டான் பாரதி! —கவி
மழையாய்ப் பொழிந்திட்டான் பாரதி!!

[இன்று பாரதியாரின் நினைவுநாளையொட்டி இந்தக் கவிதை வெளியிடப்படுகிறது]

## ஜெர்மன் இசைக் குழுவினருக்கு கல்வியமைச்சர் பாராட்டு

சென்னை,செப்.11—இந்திய அரசின் கலாசார பரிவர்த்தனை திட்டத்தின் அடிப்படையில் சென்னைக்கு வருகை தந்திருக்கும் ஜெர்மனிய ஜனநாயகக்குடியரசின் ''ப்ராம்ஸ் ட்ரியோ'' இசைக் குழுவினருக்கு தமிழ்நாடு அரசு சார்பில் தமிழ்நாடு இயல் இசை நாடகமன்றம் பாராட்டு தெரிவித்தது.

இந்த விழா எழும்பூர் பொருட்காட்சி அரங்கில் நடைபெற்றது. தமிழக கல்வியமைச்சர் நெடுஞ்செழியன் தலைமை வகித்தார். அவர் பேசும்போது கூறியதாவது:

''ஒவ்வொரு நாட்டின் தேசியப் பண்பாடு, மற்றும் பழக்க வழக்கங்கள் எத்துணை பாறுபடினும் ஒரு நாட்டின் கலாசார உறவு உலக அரங்கில் சமாதானம், சகோதரத்துவம் நிலவஉதவுகிறது; இயல் இசை நாடகம் ஆகிய கலைகள் எல்லா நாட்டு மக்களுக்கும் ஏகோபித்த சொத்தாகும்'' என்றார்.

ஜெர்மன் ஜனநாயகக் குடியரசின் இசைக்குழுவினரான பாக்மர் லேமன் (பியானோ) ஜெக் ஆப்மன் (வயலின்), சாட்டெட்டப் (வயலின் செல்லோ) எய்ன்ஸ் ரேய் (பாஸ் பாடகர்) ஆகியோருக்கு பரிசுகள் வழங்கப்பட்டன. குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சியும் நடைபெற்றது.

தமிழ்நாடு இயல், இசை, நாடகமன்ற தலைவர் சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி பி. ஆர். கோகுலகிருஷ்ணன் வரவேற்றுப் பேசினர். செயலாளர் எஸ். டி. சுந்தரம் நன்றி கூறினர்.

# அடுத்த ஆண்டிலேயே பார்லிமெண்ட் தேர்தல்: ஜனசங்க தலைவர் தகவல்

ஐதராபாத், செப். 11—நாடாளுமன்றத்துக்கான தேர்தல் அடுத்த ஆண்டு பிப்ரவரி மாதம் நடக்கக்கூடும் என்று ஜனசங்க தலைவரான அத்வானி கருத்து தெரிவித்துள்ளார்.

இது பற்றி ஜனசங்கத் தலைவர் எல். கே. அத்வானி கூறியதாவது:—

### சாதகமும் பாதகமும்

தற்போது பொருளாதார நிலை முழுமையாகஅரசாங்கத்தின் கட்டுப்பாட்டையும் மீறிச் சென்றுவிட்டது. 1976-ல் பொதுத் தேர்தலை நடத்துவது என்பது ஆளுங் கட்சிக்குப் 'பாதகமாக'வே அமையும்.

முன்கூட்டியே தேர்தலை நடத்துவதன் மூலம் எதிர்க் கட்சிகளுக்கு குறிப்பாக நிதி வசதி விஷயத்தில் சாதகமற்ற நிலையை தோற்றுவிக்க முடியும் என்று ஆளுங்கட்சி கருதுகிறது. இந்த அடிப்படையிலேயே முன் கூட்டி தேர்தலை நடத்த புதுகாங்கிரஸ் கட்சி முற்படலாம்.

### தேர்தலுக்கு ஆயத்தம்

ஹைதராபாத்தில் கூடும் ஜனசங்கசெயற்குழுக்கூட்டம் இதுபற்றி பரிசீலனை செய்யும் என்றும் கட்சி அமைப்புகளை தேர்தலுக்கு ஆயத்தமாகுமாறு உஷார்படுத்துமென்றும் அவர் கூறினர்.

1972-ல் நடைபெற்றிருக்க வேண்டிய தேர்தலை இந்திரா 1970-லேயே நடத்துவார் என்று ஜனசங்கம் முன்கூட்டி எதிர்பார்த்தது என்றும் அத் தேர்தல் 1971-ல் நடந்தது என்றும் அத்வானி குறிப்பிட்டார்.

### கச்சத்தீவு

கச்சத்தீவுப் பிரச்சினையை மறுபரிசீலனை செய்யுமாறு இந்திய அரசைக்கோரும தீர்மானம ஜனசங்க செயற்குழுக் கூட்டத்தில் நிறைவேறியது.

இலங்கையுடன் நெருங்கிய தொடர்பும், நட்புறவும் கொண்டிருக்க வேண்டிய அவசியத்தை ஜனசங்கம் உணர்கிறது என்றாலும், பூமியை தானமாகக் கொடுத்து அத்தகைய நட்புறவை விலைக்குப் பெறத் தேவையில்லை என்றும் அந்தத் தீர்மானத்தில் கூறப்பட்டுள்ளது.

## சினிமா கட்டண உயர்வு: 14ந்தேதி அமுலுக்கு வருகிறது

சென்னை, செப். 11— வருகிற 14-ந் தேதி முதல் சினிமா டிக்கெட் விலை உயரும

சமீபத்தில் நடந்த சட்ட சபைக் கூட்டத்தில் கேளிக்கை வரியை உயர்த்துவதற்கான சட்டத் திருத்தம் நிறைவேற்றப்பட்டது. இந்தச் சட்டத் திருத்தத்துக்கு கவர்னரின் ஒப்புதல் கிடைத்துவிட்டது. அதன்படி, ஒரு ரூபாய் வரை உள்ள டிக்கெட்டுக்கு 5காசும், ஒரு ரூபாய் முதல் இரண்டு ரூபாய் வரையுள்ள டிக்கெட்டுக்கு 10 காசும் 2 ரூபாய்க்கு மேல் உள்ள டிக்கெட்டுக்கு 20 காசும் உயர்த்தப்படும்.

சினிமா தியேட்டர்களுக்கு விதிக்கப்பட்டுள்ள காட்சிவரியும் 14-ந் தேதிமுதல் உயர்த்தப்படும்.

## கூட்டுறவு தேயிலை தொழிற்சாலையில் 4,000 உறுப்பினர்கள்

சென்னை, செப். 11—நீலகிரி கூட்டுறவு தேயிலை தொழிற்சாலையில் சுமார் 4000 பேர் உறுப்பினர்களாக இருக்கிறார்கள்.

தொழில் கூட்டுறவு தேயிலைத் தொழிற்சாலைகள் பற்றிய சில புள்ளி விபரங்கள் கீழே தரப்பட்டுள்ளன:

1. தற்போது தேயிலை உற்பத்தி செய்யும தொழிற் கூட்டுறவுகளின் எண்ணிக்கை—8
2. மொத்த உறுப்பினர்கள் —3618.
3. தொழில் கூட்டுறவு துறையின் கீழ் கொண்டுவரப்பட்ட தேயிலைஉற்பத்தியாகும நிலப்பரப்பு— 8426 ஏக்கர்.
4. உறுப்பினர்களின் பங்கு தொகை—ரூ. 59,81,559.
5. தேயிலைத் தொழிற் கூட்டுறவுகளின் தமிழ்நாடு அரசின் பங்கு மூலதனம் 13,38,000.
6. தமிழ்நாடு அரசு வழங்கிய உறுப்பினர்களுக்கான பங்கு மூலதனக் கடன் 35,97,190.
7. தமிழ்நாடு அரசு வழங்கிய இதர கடன்கள் 4,00,000.
8. தேயிலை வாரியம் அளித்துள்ள கடன் ரூ. 51,95,000.
9. 1973-74ல் வாங்கிய தேயிலை இலையின் மதிப்பு ரூ. 73,93,223.
10. 1973—71ல் உற்பத்தியான தேயிலை 24,62,563 கிலோ.
11. 1973—74ல் தேயிலை விற்பனை ரூ. 1 26,01,317.

எம். ஜி. ஆருக்குப் பதில்

# எரிக்கப்பட்ட பைலில் என்ன இருந்தது? பக்தவத்சலம் விளக்கம்

சென்னை, செப் 11—மதுரை அ.தி.மு.க.மாநாட்டில் பைல் எரிப்பு சம்பந்தமாக எம். ஜி. ஆர்.பேசியிருந்தார்அல்லவா? இதற்குப் பதிலளித்து பக்தவத்சலம் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார். அதில் அவர் கூறியிருப்பதாவது:—

அ. தி. மு. க. தலைவர் எம். ஜி. ஆர். மதுரையில் பேசுகையில் நான் முதலமைச்சராக இருந்தபோது அரசு தலைமைச் செயலகத்தில் சில பைல்களை எரித்துவிட்டதாகவும், காலஞ்சென்ற முதலமைச்சர் அமரர் அண்ணாதுரை பெருந்தன்மையோடு என்மீது நடவடிக்கை எதுவும் எடுக்காமல் விட்டுவிட்டார் என்றும் குறிப்பிட்டிருக்கிறார். இப்போது சென்னை தலைமைச் செயலகத்தில் தி. மு. க. அரசினால் சில பைல்கள் கொளுத்தப்பட்டு விட்டது என்று குற்றம் சாட்டுக் குறிப்பிடுகையிலேயே இந்த விஷயத்தை அநாவசியமாக வெளியிட்டிருக்கிறார். என் மீது இவ்வாறு கூறப்படும் குற்றச்சாட்டு பற்றிப் பலமுறை நான் முன்பே விளக்கம் அளித்துள்ளேன். நான் பைல்கள் எதையும் கொளுத்தவில்லை என்று முன்பு கூறியதையே மீண்டும் திருப்பிச் சொல்ல வேண்டியிருக்கிறது.

### நீக்கியது என்ன ?

நான் அப்போது சில பைல்களில் உள்ள சில குறிப்புகளை மட்டும அகற்றிவிட உத்தரவிட்டேன். அப்போது எதிர்க்கட்சி அணியிலிருந்த கருணாநிதி பற்றியும் மற்றும் சில முக்கியமான உறுப்பினர்களைப் பற்றியும் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியின் போது பாதுகாப்பில் வைப்பதற்கான ஆதாரச் செய்திகள் அடங்கிய குறிப்புகளே அவை. அரசு அதிகாரிகள் அனுப்பிய இது போன்ற அந்தரங்கமான குறிப்புகள் பைல்களில் இருப்பது பின்னால் நிர்வாகம் நடத்தவரும் அரசின் பார்வையில் படுவது விரும்பத்தக்கதல்ல என்றே அவ்வாறு உத்தரவிட்டிருந்தேன். ஆட்சி நிர்வாகத்தின் நலன் கருதியே இது செய்யப்பட்டது. அமரர் அண்ணாதுரை இந்த விஷயம் குறித்துத் தீவிரமாகப் பரிசீலித்துப் பார்த்து இது விஷயமாக எந்த நடவடிக்கையும் எடுப்பதற்கில்லை என்ற முடிவுக்கு வந்ததையும் நான் அறிவேன் எம். ஜி. ஆரின் மதுரைப் பேச்சு அவருடைய அரசியல் முதிர்ச்சியின்மையையும் நிர்வாக ஒழுங்குமுறை பற்றிய அறியாமையையுமே எடுத்துக் காட்டுகின்றன.

மேற்கண்டவாறு பக்தவத்சலம் கூறியுள்ளார்.

### தொழுநோயாளிகளுக்காக

# இந்தியாவிலேயே முதல் தொழிற்சாலை: பரனூரில் பிரதமர் துவக்கிவைத்தார்

**சென்னை, செப். 11—இந்தியாவிலேயே முதன்முதலாக தொழு நோய் பிச்சைக்காரர்களுக்காக அமைக்கப்பட்ட நவீன தொழிற்சாலையை பிரதமர் இந்திரா காந்தி திறந்து வைத்தார்.**

**ஸ்வீடன் நாடும், தமிழக அரசும் சேர்ந்து அமைத்துள்ள இந்த நவீன தொழிற்சாலை 8 லட்சம் ரூபாயில் அமைக்கப்பட்டுள்ளது.**

செங்கற்பட்டு அருகேவுள்ள பரனூரில் இரவலர் மறுவாழ்வு இல்லத்தில் இந்தத் தொழிற்சாலை அமைக்கப்பட்டுள்ளது.

இந்த விழாவுக்கு முதல் அமைச்சர் கருணாநிதி தலைமை வகித்தார்.

நேற்று நடுப்பகல் 12-10-க்கு பரனூர் வர வேண்டிய பிரதமர் 1-05-க்கு தான் வந்து சேர்ந்தார்.

அதன் பிறகு அந்த விழா 30 நிமிடத்தில் முடிந்தது.

பிரதமரை வரவேற்று முதலமைச்சர் பேசுகையில் தமிழக அரசு அமைத்துள்ள 10 இரவலர் மறுவாழ்வு இல்லங்களின் நடவடிக்கைகளை விவரித்தார்.

10 இல்லங்களிலும் 4 ஆயிரம் தொழுநோய் பிச்சைக்காரர்கள் இருக்கிறார்கள் இப்படிப்பட்ட நற்காரியங்களுக்கு மத்திய அரசு பேருதவி தரவேண்டும் என்று முதல்வர் பிரதமரிடம் கோரினார்.

முதலமைச்சர் பேசிய பிறகு பரனூர் இல்லத்தில் உள்ள ஆண்களுக்கு வேட்டியும், பெண்களுக்கு சேலைகளையும் பிரதமர் வழங்கினார்.

விழாவில் பிரதமர் பேசியதாவது:—

தொழுநோய் என்ற பயங்கர நோயால் பாதிக்கப்பட்டவர்களுக்கு புதுவாழ்வு அளிக்கும் இந்த இல்லத்தில் தொழிற்சாலையை திறந்து வைப்பதில் மகிழ்ச்சி அடைகிறேன்.

தொழு நோய்க்கும் நிரந்தர சிகிச்சை மூலம் பரிகாரம் காணமுடியும்.

பயம், வெட்கம் காரணத்தால் சிலர் இந்த நோய் கண்டவுடன் மறைக்கிறார்கள் இதனால் சிக்கல் ஏற்படுகிறது

இந்த வியாதி கண்டவுடன் சிகிச்சை பெற்றால் நோயில் இருந்து விடுபட முடியும்.

உலகத் தொழு நோய் மாநாட்டுத் தலைவர் இது குறித்து ஒரு ஆலோசனை தெரிவித்து இருக்கிறார்.

மக்கள்கூடும் பொது இடங்களில் மருத்துவ ஆய்வு நடத்தி யார் யாருக்கு இந்த நோயின் ஆரம்ப அறிகுறி இருக்கிறது என்று கண்டறிந்து சிகிச்சை அளிக்கலாம் என்று சொன்னார். இது நல்ல திட்டம்.

காந்தி பிறந்தநாளில் துவக்கப்பட்ட இந்த தொழுநோய் இல்லப்பணி பாராட்டுக்குரியது.

இங்கே அமைக்கப்பட்டுள்ள தொழிற்சாலைக்கு ஸ்வீடன் நாடு ஒத்துழைப்புத் தந்து இருக்கிறது. மற்ற நாடுகளும் இதுபோன்ற ஒத்துழைப்பைத் தர இது எடுத்துக்காட்டாக இருக்கிறது என்று பிரதமர் கூறினார்.

விழாவின் இறுதியில் அமைச்சர் சி. வி. எம். அண்ணாமலை நன்றி கூறினார்.



குற்றங்களை விரைவாகக் கண்டுபிடிக்க சென்னை போலீஸ் துறையில் 'நவீன மைக்ரோ வேவ்' கருவி பொருத்தப்படுகிறது. இதற்கான ஒப்பந்தத்தில் ஐ. ஜி. அருளும், பாரத் எலக்ட்ரானிக்ஸ் நிறுவனத்தை சேர்ந்த மதனும் கையொப்பமிட்டனர்.

## இன்றைய சினிமா

| | |
|---|---|
| **சென்னை** | |
| ராம் | பலேபாண்டியா |
| நியூ எல்பின்ஸ்டன் | சந்திரகாந்தம் |
| நேஷனல் | பட்டிக்காடா பட்டணமா |
| சராஸ் | கல்யாணமாம் கல்யாணம் |
| **தாம்பரம்** | |
| நேஷனல்- | உன்னைத்தான் தம்பி |
| எம். ஆர். தியேட்டர் | அத்தையா மாமியா |
| ஸ்ரீசித்ரா | சம்பூர்ண ராமாயணம் |
| **வில்லிவாக்கம்** | |
| ராயல் | தங்கப்பதக்கம் |
| **குரோம்பேட்டை** | |
| வெற்றி | ராஜநாகம் |

## நீர் மட்டம்

சென்னை, செ. 7—

| | | |
|---|---|---|
| மேட்டூர் | 68·80 அடி | |
| | மீட்டர் | |
| பெரியாறு | 6·01 | ,, |
| வைகை | 10·24 | ,, |
| பாபநாசம் | 20·38 | ,, |
| கிருஷ்ணகிரி | 10·25 | ,, |
| சாத்தனூர் | 14·04 | ,, |
| மணிமுத்தாறு | 15·51 | ,, |
| பிச்சிபாறை | 2·21 | ,, |
| பெருஞ்சானி | 10·32 | ,, |

# கார் டிரைவர் சாட்சியம்

2-ம் பக்கத் தொடர்ச்சி

சி.வரை படித்திருக்கிறேன். 1969-ல் அந்தோணி ஆட்டோ ஓர்க்ஷாப்பில் வேலை கற்றுவந்தேன். அங்கு வேலைசெய்த ஜோதி என்னும் வர்ணம் பூசுபவர் மூலம் கோபால் (8 வது எதிரி) தெரியும். அவர் பழக்கமானார். 1970-ல் அவர் ஒரு ப்ளைமவுத் காரை கொண்டுவந்தார். அப்போது (எதிரிகள்) பார்த்தசாரதி, வைத்தி, கண்ணன், வேணுகோபால் (அப்ரூவர்) அங்கு வந்தனர் (சாட்சி அனைவரையும் அடையாளம் காட்டினார். ப்ளைமவுத் காரை விற்றுத் தரும்படி என்னிடம் சொன்னார்கள். 15 நாட்கள் அந்த கார் எங்களிடம் இருந்தது. பின்னர் கிருஷ்ணராவ் பண்டாரி என்பவரிடம் ப்ளைமவுத் காரை ஓபல்காரின் மேல் மாற்றிக்கொண்டோம். அப்போது பார்த்தசாரதி 59, பேசின் பிரிட்ஜ் ரோடில் குடியிருந்தார். அவர் பிள்ளைகளை பள்ளியில் சேர்க்க நுங்கம்பாக்கத்தில் நெ. 8 கிருஷ்ணய்யர் தெருவில் உள்ள வீட்டின்மேல்மாடியை மாதம் ரூ. 250 வாடகைக்கு ரூ. 1000 முன்பணம் கொடுத்து குடி இருக்க நான்தான் ஏற்பாடு செய்தேன். நானும் அது முதல் அவர் வீட்டில் தங்கிவிட்டேன். பிள்ளைகளை கான்வெண்டிற்கு காரில் அழைத்துச் செல்வேன், பார்த்தசாரதியின் சொந்த வேலைகளையும்செய்துவந்தேன் அவருக்கு எதுவும் வேலையில்லை. வீட்டில் ஒரு அல்சேஷியன் நாயை வளர்த்து வந்தார். வீட்டில் பிள் களுக்குப் பாடம் கற்பிக்க டிமாண்டி என்னும் சட்டக்காரப் பெண்ணை ரூ. 120/-க்கு அமர்த்தியிருந்தார். நான் பல தடவை அவர் சொல்படி பொன் வெள்ளி நகைகள், சாமான்களை அடகுவைத்து பணத்தை பார்த்தசாரதியிடம் கொடுத்திருக்கிறேன். திருப்பதிக்கு சென்று வந்ததும் பெங்களூருக்கு சென்று வந்தார்.

### தங்கக் கட்டிகள் விற்பனை

அன்று இரவு பார்த்தசாரதியின் வீட்டுக்கு வைத்தி அயூப் கண்ணன் ஆகியோர் வந்தனர். ஓபல் காரில அழைத்துச் சென்று விட்டுவந்தேன். மறுநாள்காலை பார்த்தசாரதி கொடுத்த 2 தங்கக்கட்டிகளை கோடம்பாக்கம் பாரஸ்மல்லிடம் ரூ. 5000க்கு விற்று பணத்தை பார்த்தசாரதியிடம் கொடுத்தேன். 28—10—72 அன்று அயூப்கானின் தம்பிக்கு ரூ 300 தந்தி மணியார்டர் அனுப்பினேன் பார்த்தசாரதி மனைவி ஜமுனாவுக்காகவும் தந்தி மணியார்டர் அனுப்பினேன், பார்த்தசாரதி [illegible] பணத்தை கொடுத்தார் ஒரு நாள், பார்த்தசாரதி ஜார்ஜ் டவுன் சி-3 போலீஸ் நிலையத்தில் வைத்தியையும் கண்ணனையும் விசாரிக்கிறார்கள் என்று சொல்லி தன் மனைவி பிள்ளைகளை கோயம்புத்தூரில் மைத்துனர் வீட்டில் விட்டுவிட்டு வந்தார். சென்னை சுதாரா ஹோட்டலில் வேறு பெயரில் தங்கிக்கொண்டு கிருஷ்ணய்யர் தெரு வீட்டில் 1 தங்கக் கட்டி இருப்பதாகச் சொல்லி விற்றுவரச் சொன்னார். மாம்பலம் உஸ்மான் ரோடில் சாந்திபாபுவிடம் ரூ. 2600-க்கு விற்று பணத்தை பார்த்தசாரதியிடம்கொடுத்தேன் 12-2-73-ல் ரகசியப் போலீசார் என்னை விசாரித்தனர். பாரஸ்மல்லிடம் இருந்த தங்கக் கட்டிகளை கைப்பற்றினர். இவ்வாறு குமார் சாட்சியமளித்தார்.

தொடர்ந்து எதிரிகளின் வக்கீல்கள் ராதாகிருஷ்ணன், கோபு மேனன், துரைபதி. ராஜப்பா, குமாரி வேங்கடலட்சுமி ஆகியோர் சாட்சியை குறுக்கு விசாரணை செய்தனர்.

அப்போது அவர் தன் தாயார், சகோதரி, சகோதரியின் கணவருடன் குடியிருப்பதாகவும் மாமாவுக்கு ரூ. 600 மாத வருமானமென்றும், மோட்டார் சைக்கிளில் விபத்துக்குள்ளாகி காலை முறித்துக்கொண்டது உண்மை என்றும் ஆனால், மோட்டார் சைக்கிளை சொந்தக்காரர்களுக்கு தெரியாமல் திருட்டுத்தனமாய் எடுத்துச் செல்லவில்லை என்றும், டி. வி. எஸ்., லூகாஸ் கம்பெனியில் பொருள்களை களவாடியதாக தான் வேலையினின்று நீக்கப்படவில்லையென்றும், திருவள்ளூரில் ஈக்காடு பஞ்சாயத்து யூனியன் மருந்து தெளிக்கும் ஸ்ப்ரேயரை திருடினதாக போலீஸ் வழக்கு தன் மேல் இல்லையென்றும், கோடம்பாக்கம் நடராஜன் சந்திரசேகரன் ஆகியோருக்கும் தனக்கும் பெண் விவகாரத்தில் தகராறு இல்லையென்றும் குமார் சாட்சியமளித்தார்.

இதைத் தொடர்ந்து (எதிரி) பார்த்தசாரதி குமாரை குறுக்கு விசாரணை செய்தார். அப்போது குமார்தான் ராஜபுத்ரா சிங் வகுப்பைச் சேர்ந்தவர் என்றும் தகப்பனார் பெயர் ராமச்சந்திரன், தாயார் லலிதா என்றும், தற்போது ரங்கராஜபுரத்தில் ரூபாய் 200 மாத வாடகையில் குடியிருக்கிறார்கள் எனவும் குடும்

3 பத்தி பார்க்க

### சம்பளப் பட்டியல் மோசடி

# மேயர் ஆறுமுகம் உட்பட 8 கவுன்சிலர்கள் கோர்ட்டில் திடீர் சரண்

**சென்னை, செப். 11—முன்னாள் மேயர் ஆறுமுகம் உட்பட, கலைக்கப்பட்ட சென்னை மாநகராட்சியில் கவுன்சிலர்களாக இருந்த 8 பேர் நேற்று கோர்ட்டில் திடீர் என்று சரணடைந்தனர்.**

மாநகராட்சி சம்பளப்பட்டியல் மோசடி சம்பந்தமாக இந்த 8 பேரையும் போலீசார் தேடிவந்ததாகக் கூறப்படுகிறது.

தலைமை செஷன்ஸ் கோர்ட்டில் நீதிபதி சிதமபரம முன்னிலையில் இவர்கள் சரணடைந்தனர்.

சரணடைந்த 8 பேர்களில் 6 பேர் தி.மு.க.வைச் சேர்ந்தவர்கள்.

ஒருவர் ப. காங்கிரசையும், ஒருவர் அ. தி. மு. க.வையும் சேர்ந்தவர்.

சரணடைந்த 8 பேர்கள் சார்பிலும் ஜாமீன் மனு தாக்கல் செய்யப்பட்டது.

அரசாங்க வக்கீலும் இவர்களை ஜாமீனில் விடுவதில் ஆட்சேபணையில்லை என்று தெரிவித்தார்.

இதன்பேரில் இந்த 8 பேர்களையும் தலா ரூ. 2 ஆயிரம் சொந்த ஜாமீன் பேரிலும், அதே தொகைக்கு 2 நபர் ஜாமீன் பேரிலும் விடுதலை செய்ய நீதிபதி உத்தரவிட்டார்.

கீழ்க்கண்டவர்கள் சரணடந்து ஜாமீனில் விடுதலையானார்கள்.

1. ஆர். ஆறுமுகம் (முன்னாள் மேயர்)
2. புகழேந்தி
3. பார்த்தசாரதி
4. நல்லதம்பி
5. லோகநாதன்
6. மலையப்பன்

இவர்கள் அனைவரும் தி. மு. க. வைச் சேர்ந்தவர்கள்.

7. நடராஜ அய்யர் (ப. (காங்கிரஸ்)

8. ராகவலு (அ. தி. மு.க)

ஏற்கனவே இந்த ஊழல் சம்பந்தமாக கவுன்சிலர்கள் உட்பட 114 பேர் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள் என்பது தெரிந்ததே.

5-ம் பத்தி தொடர்ச்சி

பத்தை கவனிக்கும் தன் மாமாவுக்கு மாதம் ரூ. 600 சம்பளம் வருவதாகவும் அவரின் 2 பிள்ளைகளும் கான்வெண்டில்படிப்பதாகவும்கூறினார். தன் ஒரு சகோதரியின் கணவர் கிறிஸ்தவர் என்றும், மற்றொரு சகோதரியின் கணவர் ஹிந்து என்றும் ரங்கராஜபுரத்திற்கு குடிவருவதற்கு முன்னால் யுனைட்டட் இந்தியா காலனியில் குடியிருந்ததாகவும் கூறினார்.

விசாரணை மீண்டும் 13—9—74 வெள்ளிக்கிழமை தொடர்ந்து நடைபெறுகிறது.

(7-ம் பத்தி தொடர்ச்சி)

"மதுவிலக்கு வெற்றி விழாவாக" கொண்டாடுவது சாலப்பொருத்தமாகும்.

எனவே ஒவ்வொரு மாவட்டத்திலும், குறிப்பாக அறப்போராட்டம் நடைபெற்ற மையங்களில் ஊர்வலங்கள், பொதுக்கூட்டங்கள் நடத்தி இவ்விழாவை சிறப்பாக கொண்டாட வேண்டும் என்று ராமச்சந்திரன் பழைய காங்கிரஸ் கட்சியினரை கேட்டுக்கொண்டுள்ளார்.

# முப்பெரும் விழா ஊர்வலம்: மு. க. முத்து மன்றம் வேண்டுகோள்

சென்னை, செப். 11—சென்னை மாவட்ட மு. க. முத்து முத்தமிழ்க் கலைமன்றச் சார்பில் செப். 15-ந் தேதி முதல் அக்டோபர் முடிய முப்பெரும் விழா கொண்டாட முடிவு செய்யப்பட்டுள்ளது.

சென்னையில் செப். 29-ந் தேதி நடைபெறவிருக்கும் ஊர்வலத்தில் மு. க. முத்து முத்தமிழ்க் கலை மன்றத்தைச் சேர்ந்தவர்கள் பெருவாரியாக கலந்து கொள்ள இருக்கிறார்கள்.

சென்னையில் ஆங்காங்கு அமைத்துள்ள மு. க. முத்து முத்தமிழ்க் கலைமன்றங்களைச் சேர்ந்த உறுப்பினர்கள் கழகக் கொடி பேனர்களுடன் வந்து ஊர்வலத்தில் கலந்து கொள்ளும்படி மேற்படி மன்றச் செயலாளர் எஸ். ஏ. வேனிற் செல்வன் கேட்டுக் கொண்டுள்ளார்.

Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No. 4, South Bank Road, Madras-600028 and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.
Chief Editor: S. V. G. Sowrirajulu.
Honorary Editor: N. Muthukumarasami.

# சங்கராச்சாரியாரிடம் ஆசிபெற்றார் இந்திரா

சென்னை, செப். 11—சென்னை வந்திருந்த பிரதமர் இந்திரா காந்தி நேற்று காஞ்சி காமகோடி பீடாதிபதி சங்கராச்சாரியாரை சந்தித்தார்.

அவர் சங்கராச்சாரியாருடன் சுமார் 90 நிமிஷங்கள் இருந்தார். பிரதமரோடு வந்த யாரும் இந்திராவுடன் உள்ளே செல்லவில்லை.

நாட்டுப் பிரச்னைகள் சுமுகமாக தீர்ந்து நன்மைபெற பிரதமர் இந்திரா காந்தி அங்கு சிறிது நேரம் பிரார்த்தனை செய்ததாக சங்கராச்சாரியார் ஆசிரமத்தைச் சேர்ந்த ஒருவா தெரிவித்தார்.

இந்திரா காந்தி அந்த ஆசிரமத்தில் 30 நிமிஷம் நேரம் தங்குவதற்கு திட்டமிட்டிருந்தார். எனினும் மொத்தம் 90 நிமிஷ நேரம் இருந்தார்.

காஞ்சீபுரம் அருகே உள்ள தேனம்பாக்கத்தில் சங்கராச்சாரியார் இருக்கிறார்.

அவரைத் தரிசித்து ஆசிபெற பிரதமர் சென்றார். சங்கராச்சாரியாரை தரிசிக்க டெல்லியில் இருந்து கொண்டு வந்த பழங்களுடன் பிரதமர் சென்றார்.

தேனம்பாக்கம் சென்றபோது பிரதமருடன் வந்த மரகதம் சந்திரசேகர், சி. ஆர். பட்டாபிராமன் ஆகிய முக்கியஸ்தர்கள்கூட பிரதமருடன் சங்கராச்சாரியாரைப் பார்க்கப் போகவில்லை.

சங்கராச்சாரியார் உலக நன்மைக்காக 15 நாட்களாக மவுன விரதம் மேற்கொண்டு இருக்கிறார். எனவே அவர் பிரதமரோடு பேசினாரா என்பது தெரியவில்லை

பிரதமர் கூறியதையெல்லாம் சங்கராச்சாரியார் கேட்ட வண்ணம் இருந்து புன்னகைத்து கை உயர்த்தி ஆசீர்வாதம் புரிந்தார்.

சங்கராச்சாரியார்-இந்திரா காந்தி சந்திப்பின்போது பக்கத்தில் வேறு யாரும் இல்லை.

சங்கராச்சாரியாரை சந்தித்ததற்கு முன்னர் காஞ்சி காமாட்சியம்மன்கோயிலுக்கு சென்று பிரதமர் சாமி தரிசனம் செய்தார். அமைச்சர் கண்ணப்பன் பிரதமரை அங்கே வரவேற்றார்.

ஏகாம்பரேஸ்வரர் வரதராஜப் பெருமாள் கோயில்களைச் சேர்ந்த யானைகள் பிரதமரை வரவேற்று மாலையிட்டன.

காஞ்சிகாமாட்சி அம்மனுக்கு சார்த்தப்பட்ட பட்டுப் புடவை பிரதமருக்கு வழங்கப்பட்டது.

# பழைய காங்கிரஸ் நடத்தும் "மதுவிலக்கு வெற்றி விழா"

சென்னை, செப். 11—தமிழ் நாட்டில் மீண்டும் மதுவிலக்கு அமுல் படுத்தப்பட்டதையொட்டி பழைய காங்கிரஸ் கட்சி மதுவிலக்கு வெற்றி விழாக் கொண்டாடப்போவதாக அறிவித்துள்ளது.

இந்த வெற்றி விழா காந்திஜி பிறந்த அக்டோபர் 2-ந் தேதியிலிருந்து 9-ந் தேதி வரை ஒரு வார காலம் நடைபெறும் என்று தமிழ்நாடு பழைய காங்கிரஸ் தலைவர் ராமச்சந்திரன் அறிவித்துள்ளார்.

மதுவிலக்கை அமுல் படுத்தக்கோரி கடந்த ஆண்டு அக்டோபரில் பழைய காங்கிரஸ் போராட்டம நடத்தியதை ராமச்சந்திரன் குறிப்பிட்டு தமிழ் நாட்டில் மதுவிலக்கு மீண்டும அமுல்படுத்தப்பட்டுள்ளதானது இப்போராட்டத்தின் வெற்றியாகும என்று கூறியுள்ளார்.

இதுபற்றி ஓர் அறிக்கையில் அவர் கூறியுள்ளதாவது:—

இவ்வாண்டு காந்தியடிகளின் பிறந்தநாள்விழா நாம் அனைவரும் பெருமைப்படும் வகையில் அமைந்திருப்பது மகிழ்ச்சிக்குரியது. காந்தியடிகளின் உயர் இலட்சியமாகிய "மதுவிலக்கை" முதன்முறையாக அமுல்படுத்திய பெருமை தமிழகத்திற்கு உண்டு, அந்தச் சிறப்பினை சீர்குலைத்து தமிழகத்தில் மீண்டும் மதுவைப் புகுத்தியது தி. மு. க. அரசு மதுவை இன்னதென்று அறியாமல் வாழ்ந்து வந்த இளந்தலைமுறையினரைக் கெடுத்ததோடு பல குடும்பங்களையும் சீரழித்து விட்டது இச்செயல்.

காந்திய அறநெறியின் அடிப்படையில், பெருந் தலைவர் காமராஜரின் வழிகாட்டுதலில், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி நடத்திய அறப்போராட்டத்தில் பல்லாயிரக் கணக்கான சத்தியாகிரகிகளின் தியாகத்தால்—மீண்டும் மதுக்கடைகளை மூட வைத்து காந்தியடிகளின் லட்சியத்திற்கு வெற்றிதேடித் தந்திருக்கின்றோம்.

சென்ற ஆண்டு காந்தியடிகளின் பிறந்த நாளில் தொடங்கிய இப் போராட்டத்தின் வெற்றியை காந்தியடிகளின் பிறந்த நாளான அக். 2-ம் தேதி முதல் அக். 9 முடிய ஒரு வாரத்திற்கு

1-ம் பத்தி பார்க்க

## பிரதமர் இந்திரா வேதனை

2-ம் பக்கத் தொடர்ச்சி

விட்டதா' என்று கேட்டார்கள்.

மக்கள் ஆட்சியில்தான் மக்கள் தங்கள் பங்கை செய்ய முடியும் ஆனால் ஜனநாயக முறையில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. முன்னேற்றமான நடவடிக்கைகளை எடுக்கும் பொழுது, எதிர்ப்புகள் கிளம்புகின்றன. அவர்கள் மக்களை திசை திருப்பிவிடுகின்றனர்.

இப்பொழுது 'ஊழல்ஊழல்' என்று கூறிக்கொண்டிருக்கிறார்கள். இப்படிச் சொல்வதால் ஊழலை ஆதரிக்கிறேன் என்று நினைத்துவிடக்கூடாது. ஊழலை ஒழிக்க நடவடிக்கை எடுக்கப்படும். மக்களும் கண்காணித்து ஒத்துழைப்பு தந்தால்தான் ஊழலை ஒழிக்க முடியும்.

ஊழலை ஒழிக்கிறேன் என்று கூறிக்கொண்டு, உற்பத்தி செய்வோரை தடுத்து, மாணவர்களைப் பள்ளிக்குச் செல்லாமல்தடுத்து' உழவர்களையும் உற்பத்தி செய்யாது தடுத்து உற்பத்தி பெருக்கத்துக்கு முட்டுக் கட்டை போடுகின்றனர். அதனால் ஊழல் ஒழியாது.

விலைவாசி உயர்வைஎதிர்த்து நடத்தும் கிளர்ச்சிகள், விலைவாசியை உயர்த்துமே அன்றி, குறைக்காது.

இன்று மக்கள் எந்த கட்சியோடு, எந்த கட்சி இணையப் போகிறது என்று ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். பல கட்சிகள் வெளிப்படையாக பலகுற்றங் குறைகளை கூறினாலும் நம்மோடு சேர ஆசைப்படுகிறார்கள்.

தேர்தலுக்கு இன்னும் நீண்ட காலம் இருக்கிறது. தேர்தல், ஓட்டு என்று நினைப்பிலேயே அரசியல் கட்சிகள் இருக்காமல் மக்களுடைய பிரச்சினைகளை தீர்க்க நினைக்க வேண்டும்.

சில கட்சிகள் மாணவர்களை அரசியலில் இழுக்கின்றன. மாணவர்களில் நல்லவர்களும் இருப்பார்கள், கெட்டவர்களும் இருப்பார்கள். மாணவர்கள் நல்ல வழிகளிலேயே பயன்படுத்த வேண்டும்.

'புரட்சி' என்ற வார்த்தையைக் கேட்டால், ஏதாவது செய்யவேண்டும்போல் துடிக்கிறார்கள். நாம் அரசியல் உரிமையைப் பெற்றது 'அகிம்சை' என்ற வார்த்தையிலே தான் புரட்சி என்றால் என்ன என்று அறியாமல் பலர் இவ்வார்த்தையை உபயோகப்படுத்திவருகின்றனர். மக்கள் மத்தியில் 'தேவைகளை கேட்கக் கூடிய அளவிற்கு' புரட்சித் தோன்றி இருக்கிறது.

### வழி காட்டும் தமிழ்நாடு

நம்மை எதிர்நோக்கும் சவால்களை சமாளித்து அயராது உழைத்து, நெருக்கடியைத் தீர்க்க வேண்டும்.

தமிழ்நாடு பிற மாநிலங்களுக்கு வழிகாட்டுவதுபோல் இந்தியா பல நாடுகளுக்கு வழி காட்டியாக அமைய நாம் ஒற்றுமையாக நிற்க வேண்டும். ஒளிமயமான எதிர்காலம் நம்மை நோக்கி இருக்கின்றது

மேற்கண்டவாறு பிரதமர் இந்திரா காந்தி பேசினார். மற்றும் இராமையா, மத்திய அமைச்சர் சி. சுப்பிரமணியம் ஆகியோரும் பேசினர். ஏ. ஜே. தாஸ் நன்றி கூறினார்.